11. சான்றோர் நட்புக்கு உவமையாகக் கூறப்படுவன யாவை?

சான்றோர் ஒருவருக்கொருவர், தொலைவில் இருந்தாலும் தக்க சமயத்தில் ஒருங்கு சேர்வர். இதற்கு உவமையாய் மண்ணுக்கடியில் உள்ள பொன்னும், ஆழ்கடலில் கிட்டும் முத்தும் பவளமும், மலையில் கிட்டும் மணியும் ஒன்றுக்கொன்று இடையீடுபட நெடுந்தொலைவில் இருந்தாலும், அவை ஒருங்கு சேர்ந்து ஆபரணமாய் அமைவது கூறப்படுகிறது.

12. சீறாப்புராணம் – குறிப்பு எழுது:

சீறாப்புராணம் பெயர்க்காரணம்: 'சீறத்துந்நபி' என்பது அரபு மொழித் தொடராகும். அதற்குத் திருநபியின் புகழ்மிக்க வரலாறு என்பது பொருள். சீறத் – வரலாறு. அதுவே சீறா என மருவி நின்றது. அரபு மொழியிலமைந்த நபிநாயகத்தின் புகழ்மிக்க வரலாற்றைக் கூறும் புராணமாதலால், இது சீறாப்புராணம் எனப் பெயர் பெற்றது. புராணம் – பழமையான வரலாறு. இந்நூல் விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டம், ஹிஜ்ரத்துக் காண்டம் என்னும் மூன்று பெரும் பிரிவுகளையும் 92 படலங்களையும், 5027 விருத்தப்பாக்களையும் உடையது.

13. புலியின் கொடுஞ்செயல்கள் பற்றி உமறுப்புலவர் கூறுவன யாவை?

புலியின் கொடுஞ்செயல்கள் பற்றி உமறுப்புலவர் கூறுவன:

வனத்திடை வாழும் புலி, மிகவும் கூர்மை வாய்ந்த நகங்களைக் கொண்ட சிங்கக் கூட்டங்களைத் தவிர்த்துப் பிற மிருகங்களைக் கொன்று, அவற்றின் தசைப் பகுதிகளைத் தின்னும்; பனை போன்ற பெரிய தும்பிக்கையினையும் மும்மதங்களையும் கொண்ட யானைகளின் கொம்புகளைப் பிடித்து இழுத்து, அவற்றின் மார்பினைக் கீறி இரத்தத்தைக் குடிக்கும்; பிறகு, உறங்காது நின்று, அரிய பெரிய மலைகளும் சிதறிடும்படி இடியைக் காட்டிலும் மிகுதியாய் உறுமும்.

14. நபிகள்நாயகத்தைக் கண்ட புலியின் நிலையை எழுது.

நபிகள் நாயகத்தைக் கண்ட புலியின் நிலை:

கூர்மையான நகத்தினையும் திண்ணிய வலிமையையும் கொண்ட அப்புலி, தன்னை நோக்கி வரும் முகம்மது நபியினைப் பார்த்ததும் தன் வாலை வளைத்தது; பெரிய தலையைத் தாழ்த்தியது; அரிய உடல் நடுக்கமுற்றது; பையப்பைய நடந்து, நபிக்கு எதிராய் வந்து, "குளிர்ச்சி தங்கிய தளிர்போன்ற உங்கள் பாத தரிசனத்துக்கு சலாம்," என்று சொல்லி வணங்கியது.

15. 'சாதனைப் பூக்கள்' என்று எவற்றை இளந்திரையன் சுட்டுகிறார்?

செடியின் இலட்சியம், நல்ல பூவினைத் தோற்றுவித்தல். அப்பூவினை வெளிப்படுத்தும் வரை அச்செடி இளைப்பாறுவதில்லை. வேதனையினை எண்ணி வருந்தி, இலட்சியத்தை விட்டு விலகுவதில்லை; அதுபோல, இடையூறுகளையோ தடைகளையோ கண்டு தயக்கம் காட்டக்கூடாது; இளைப்பாற எண்ணி நேரத்தை வீணாக்கக் கூடாது. இவற்றையெல்லாம் தவிர்த்து, தொய்வின்றித் தொடர்ந்து முயன்றால் சாதனைப் பூக்களை அடைய முடியும் என்கிறார், சாலையார்.

10. உழவுத் தொழில் குறித்து எழுது.

- பழந்தமிழகத்தில் உழுபவரே உயர்ந்தோர் எனப்பட்டனர்.
- உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் என்பது குறள்.
- உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே என்ற புகழ்மொழி இன்றும் தமிழரால் போற்றப்படுகிறது.
- உழவுக்குச் சிறப்பு பெற்ற மருத நிலம் வயலும் வயல் சார்ந்த இடமாய் இருந்தது.
- மருத நிலத்தின் பெருமை கருதியே வேந்தனை முதன்மைப்படுத்தினர் தமிழர்.

11. காந்தியடிகளைக் கவர்ந்த நாடகம் எது? விளக்குக.

- அரிச்சந்திரனை ஒரு பொய் பேச வைக்க வேண்டும் என்பதற்காகப் பல இன்னல்களுக்கு உள்ளாக்குகிறார் முனிவர் விசுவாமித்திரர்.
- அதனால் நாடு, மனைவி, மகனை இழக்கிறான். சுடுகாட்டில் பணிபுரிகிறான்.
- பல இன்னல்களை இழைத்தும் பொய் சொல்லேன் என்று கூறினான்.
- காந்தி வாய்மையை நாடகம் வாயிலாக உணர்ந்து தாமும் சத்தியவானாய் இருக்க வேண்டும் என்று உறுதி பூண்டார்.

12. மனித நேயம் குறித்து காந்தியடிகள் கூறியது யாது?

- தேசாபிமானமும் மனிதாபிமானமும் ஒன்றுதான். அதற்குக் காரணம் மனிதனாய் இருப்பதும், மனிதாபிமானியா இருப்பதும்.
- காந்தி இராமனைப் போற்றியதற்குக் காரணம், இராமன் மனிதனாய் பிறந்து மனிதப் பண்புகளால் உயர்ந்து, மானுடரோடு, மற்ற உயிரினங்களையும் உடன் பிறந்தவர்களாய் ஏற்று உலகம் உய்ய வழிகாட்டியதால்தான்.
- மனிதர் மொழியாலும், நாட்டாலும் உணர்த்தப்படுவதைக் காட்டிலும் மனிதத் தன்மையால் உணர்த்த பெறுவது சிறப்பு.
- மனிதனாய் இருப்பதே பெருமைக்குரியது என்று எண்ணினால் உலகம் ஒரு நல்ல சமுதாயமாக உருவாகும்.

13. இன்னா செய்யாமை குறித்து காந்தியடிகள் கூறுவது யாது?

- காந்தியடிகள் அறப்போரினைத் தேர்ந்தெடுத்தார். மனிதனின் நோக்கம் உயர்ந்ததாகவும், தூய்மையானதாகவும் இருந்தால் மட்டும் போதாது. அதை அடையும் வழிமுறைகளும் தூய்மையானதாகவும் பிறருக்குத் துன்பம் தராததாகவும் இருத்தல் வேண்டும். ஆங்கிலேயரைத் துன்புறுத்தி விடுதலை பெறுவதைவிட அமைதியான முறையில் விடுதலை பெறுவதே சிறப்பு. நெருப்பை நெருப்பால் அணைக்க முடியாது. நீரால்தான் அணைக்க முடியும். அன்பு, அருள் ஆகிய அறவழிகளில் தான் தடுக்க முடியும். அறவழியைப் பின்பற்றிப் பெறுகிற விடுதலையே நிலைக்கும் என்றார்.

14. தொழில் நுட்பக் கல்வி குறித்து எழுது.

பல் தொழில் நுட்பக் கல்லூரிகள் பல உள்ளன. பொறியியல் துறைகளில் உள்ளதுபோல் இக்கல்லூரியில் பல துறைகள் உள்ளன. பத்தாம் வகுப்பில் தேர்ச்சி பெற்றவர்கள் தாம் பெற்ற உயர் மதிப்பெண்களுக்கு ஏற்ப இக்கல்லூரிகளில் சேர்ந்து பயின்று வேலை வாய்ப்புகளைப் பெறுவதற்கு இக்காலக் கட்டத்தில் வாய்ப்புண்டு.

15. பட்டதாரி ஆசிரியர் பணிக்குரிய கல்வித் தகுதிகள் குறித்து எழுது.

மேனிலைக் கல்வியில் தேர்ச்சி பெற்றோர் தமிழ், ஆங்கிலம், கணிதம், இயற்பியல், வேதியியல், விலங்கியல், தாவரவியல், பொருளியல், வரலாறு, கணக்குப் பதிவியல், கணிப்பொறியியல் முதலிய பிரிவுகளில் சேர்ந்து இளங்கலைப் பட்டமும் அதன் பின்னர் முதுகலைப்பட்டமும் பெறலாம். பட்டம் பெறுவோர் கல்வியியல் கல்லூரியில் சேர்ந்து இளம் கல்வியியல் பட்டம் பெற்று ஆசிரியர் பணியைப் பெறலாம்.

16. சிறுதொழில் பயிற்சி பற்றிக் குறிப்பு எழுது.

உலோக வேலை, கடைசல் பிடித்தல், கட்டட வரைபடம் வரைதல், நில அளவை, தச்சு ஆகியனவும், இயந்திரம், வாகனம், தொலைக்காட்சி, குளிரூட்டும் கருவி, செல்பேசி, கணினி முதலியவற்றைப் பழுதுபார்த்தல் ஆகியனவும் சிறுதொழில் பயிற்சியினுள் அடங்கும். பத்தாம் வகுப்பில் தேர்ச்சி பெற்றவர்கள் – பெறாதவர்கள் இந்தத் தொழிற் பயிற்சி நிறுவனங்களில் சேர்ந்து ஓராண்டு அல்லது ஈராண்டு பயிற்சி பெற்றுப் பணியில் சேரலாம்.

17. இராணுவம், காவல் முதலிய பணிகளில் சேர்வதற்கான தகுதிக் கூறுகள் யாவை?

12ம் வகுப்பு பொதுத் தேர்வில் தேர்ச்சி பெற்றோர் இராணுவம், காவல் முதலிய துறைகளில் சேர்வதற்கும் வாய்ப்புண்டு. இவற்றில் சேர முதலில் உடற்கூறுத் தேர்வும் நடைபெறும். "உடம்பை வளர்த்தேன்; உயிர் வளர்த்தேனே" என்னும் திருமூலர் வாக்குப்படி முறையாய் உடற்பயிற்சி செய்தவர்கள் இத்தேர்வில் வெற்றி பெற இயலும். அதன்பிறகு எழுத்துத் தேர்வு நடைபெறும். அதில் தேர்ச்சி பெற்றவர்களே பணியில் சேர இயலும்.

## 7. கலித்தொகை

ஆற்றுதல் என்பதுஒன்று அலந்தவர்க்கு உதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடுஅறிந்து ஒழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிறர் அறியாமை
முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வெளவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்

**வினாவிடை**

1. இப்பாடல் இடம் பெற்றுள்ள நூல் எது? – **கலித்தொகை**
2. கலித்தொகை எந்த நூல்களுள் ஒன்று? – **எட்டுத்தொகை**
3. கலித்தொகையை எவ்வாறு சிறப்பித்துக் கூறுவர்? – **கற்றறிந்தோர் ஏத்தும் கலி**
4. கலிப்பா எவ்வோசை பெற்று வரும்? – **துள்ளல் ஓசை**
5. சொற்பொருள் கூறுக.

   கிளை – சுற்றம் நோன்றல் – பொறுத்தல்
6. பிரித்து எழுதுக.

   அன்பெனப்படுவது – அன்பு + எனப்படுவது; பண்பெனப்படுவது – பண்பு + எனப்படுவது
7. இலக்கணக் குறிப்பு தருக. – **ஒழுகுதல், நோன்றல், பொறுத்தல் – தொழிற்பெயர்கள்**
8. இப்பாடலின் ஆசிரியர் யார்? – **நல்லந்துவனார்**

## 8. நந்திக் கலம்பகம் (நந்தி மன்னன் வீரம்)

பதிதொறு புயல்பொழிதருமணி பணைதரு
பருமணி பகராநெற்
கதிர்தொகு வருபுனல் கரைபொரு திழிதரு
காவிரி வளநாடா
நிதிதரு கவிகையும் நிலமகள் உரிமையும்
இவையிவை யுடைநந்தி
மதியிலி அரசர்நின் மலரடி பணிகிலர்
வானகம் ஆள்வாரே

**வினாவிடை**

1. இப்பாடல் இடம் பெற்றுள்ள நூல் எது? – **நந்திக் கலம்பகம்**
2. இப்பாடலின் ஆசிரியர் யார்? – **பெயர் அறிவிக்கப்படவில்லை**
3. சிற்றிலக்கியங்கள் மொத்தம் எத்தனை? – **தொண்ணூற்றாறு**
4. **சொற்பொருள் தருக.**
   1) புயல் – வேகம் 2) பணை– மூங்கில் 3) பகரா – கொடுத்து
   4) பொருது – மோதி 5) நிதி – செல்வம் 6) புனல் – நீர்
   7) கவிகை – கோடை 8) வானகம் – தேவர் உலகம்
5. கலம்பகம் எவ்வகை இலக்கியங்களுள் ஒன்று?
   தொண்ணூற்றாறு வகை சிற்றிலக்கியங்களுள் ஒன்று.
6. **இலக்கணக் குறிப்பு தருக.**
   பொழிதருமணி, பணைதருமணி, வருபுனல், நிதிதருகவிகை– வினைத் தொகைகள்
7. கலம்பக உறுப்புகள் எத்தனை? – **பதினெட்டு (18)**
8. **பிரித்தெழுதுக.**
   கலம்பகம் = கலம் + பகம்; கலம் = பன்னிரெண்டு; பகம் = ஆறு
9. இப்பாடலில் பயின்று வரும் திணை யாது? – பாடாண் திணை

## 9. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்

மீன் நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோட் டம்மாளன்
பானோக்கா யாகிலுமுன் பற்றல்லால் பற்றில்லேன்
தானோக்கா எத்துயரம் செய்திடினும் தார்வேந்தன்
கோனோக்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே

**வினாவிடை**

1. இப்பாடல் இடம் பெற்றுள்ள நூல் எது? – **நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்**
2. இப்பாடலின் ஆசிரியர் யார்? – **குலசேகர ஆழ்வார்**
3. **சொற்பொருள் தருக.**
   1) மீன் நோக்கும் – மீன்கள் வாழும் 2) தார்வேந்தன்– மாலையணிந்த அரசன்
   3) கோல்நோக்கி – செங்கோல் செய்யும் அரசனை நோக்கி
   4) என்பால்– என்னிடம் 5) தார் – மாலை
4. **இலக்கணக் குறிப்பு எழுதுக.**
   1) நோக்காய் – முன்னிலை ஒருமை வினைமுற்று
   2) கோல்நோக்கி – இரண்டாம் வேற்றுமைத் தொகை
   3) தார்வேந்தன் – இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை
   4) வாழும்குடி – பெயரெச்சம்
5. **பிரித்தெழுதுக.**
   1) பற்றில்லேன் – பற்று + இல்லேன்; 2) போன்றிருந்தேன் – போன்று + இருந்தேன்
6. ஆழ்வார்கள் எத்தனை பேர்? – **பன்னிரெண்டு**
7. பெருமாள் திருமொழியில் உள்ள பாசுரங்கள் எத்தனை? – **நூற்றி ஐந்து பாசுரங்கள்.**

**10. நிற்க நேரமில்லை**

சீக்கிரம் செல்லுக நேர்வழியில் – அதைச்
செத்தைகள் கூடியே தூர்க்குமுன்னே
நோக்கிய அத்திசை நேர்த்திசையில் – துளிச்
சோம்பலு மின்றி நடை யிடும்
கால்கள் இரண்டு படைத்தவன்நீ – பெருங்
கல்லும் மலையும் கடப்பதற்கே
மேலிரு கைகள் அவைகளுண்டே– அங்கு
விம்மும் புதர்கள் அறுப்பதற்கே
கண்ணிரண் டுள்ளன முன்னடக்க – இரு
காதுகள் உண்டு துணைவரவே
விண்களைக் கீறிவழி சமைக்க – உன்றன்
வீர மனமுண்டு செல்லுகவே!
இன்றிளைப் பாறுவம் என்றிருந்தால்– வழி
என்னென்ன வாகுமோ ஓரிரவில்
சென்றிளைப் பாறுக முற்றிடத்தே – தம்பி
தேன்வந்து பாயும்உன் நெஞ்சிடத்தே!
சாதனைப் பூக்களை ஏந்துமுன்னே– இங்கு
நல்லசெடி இளைப் பாறிடுமோ!
வேதனை யாவும் மறந்ததுபார்– செடி
வெற்றி கொண்டேந்திய பூவினிலே

**வினாவிடை**

1. இப்பாடல் இடம் பெற்றுள்ள நூல் எது? – **நிற்க நேரமில்லை**
2. இப்பாடலின் ஆசிரியர் யார்? – **சாலை இளந்திரையன்**
3. இப்பாடலில் எந்தக்கவிதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளது – **பூத்தது மானுடம்**
4. **சொற்பொருள் தருக.**
   1) செத்தை – குப்பை கூளம் 2) இளைப்பாறுதல்– ஓய்வெடுத்தல்
5. **பிரித்தெழுதுக.**
   1) கண்ணிரெண்டு – கண் + இரண்டு; 2) ஓரிரவு– ஓர் + இரவு

3. பெரியாரைத் துணையாகக் கொள்வது குறித்து வள்ளுவர் கூறும் கருத்துக்களைத் தொகுத்தெழுதுக.

**பெரியாரின் இலக்கணம்:**

✸ அறிவில் தெளிந்த பெரியோரது நட்பினை ஏற்றுக கொள்ளல் வேண்டும்.

✸ துன்பம் வரும் முன் காக்கும் தன்மை உடைய பெரியாரை நட்பாக்கிக் கொள்ளுதல் வேண்டும்.

**பெரியாரைத் துணையாகக் கொள்வதன் சிறப்பு:**

✸ பெரியாரைப் போற்றி உறவாகக் கொள்ளுதல் சிறந்த பேறாகும்.

✸ தம்மைக் காட்டிலும் அறிவில் சிறந்த பெரியோரை உறவினராய்க் கொண்டு நடத்தலே வலிமைகளுள் எல்லாம் சிறந்த வலிமையாகும்.

பெரியாரைத் துணையாகக் கொள்ளாமையால் வரும் குற்றங்கள்:

✸ குற்றம் கண்ட இடத்து இடித்துத் திருத்தும் பெரியோரின் துணையில்லாத அரசன் தன்னைக் கெடுக்கும் பகைவர் இல்லாமல் தானே கெட்டழிவான்.

✸ முதலீடு இல்லாதவர்க்கு ஊதியம் ஒன்றும் இல்லை. அதுபோல தம்மைத் தாங்கிக் காப்பாற்றும் பெரியோர் இல்லாதவர்கள் நிலைத்து வாழமுடியாது.

✸ நல்லவர் ஒருவரின் நட்பைக் கைவிடுவது பலரைப் பகைத்துக் கொள்வதை விட பத்து மடங்கு தீமையைத் தரும்.

4. பொருள் செயல் வகை என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் கூறும் வளமார்ந்த கருத்துக்கள் யாவை?

**பொருளின் சிறப்பு:**

✱ பொருள் உள்ளவரையே இவ்வுலகம் ஒரு பொருட்டாக மதிக்கும்.

✱ செல்வம் இல்லாதவரை எல்லோரும் இகழ்வர். செல்வம் உள்ளவரை எல்லோரும் சிறப்பு செய்வர்.

✱ நல்வழியில் சேர்த்த பொருள் அறத்தையும் இன்பத்தையும் தரும்.

✱ செல்வம் என்னும் அணையா விளக்கு பகைமை என்னும் இருளைப் போக்கும்.

✱ அருள் அன்பும் இல்லாமல் பிறவழியில் வரும் செல்வத்தை நீக்குதல் வேண்டும்.

✱ அரசுரிமையால் வந்த பொருள், மக்கள் வரிப்பொருள், பகைவனை வென்று கொண்ட பொருள் ஆகியன அரசனுக்குரிய பொருள்களாகும்.

**பொருளின் பயன்கள்:**

✱ அன்பு என்னும் தாய் பெற்ற அருள் என்னும் குழந்தை, பொருள் என்னும் வளர்ப்புத் தாயால் வளர்க்கப்படும்.

✱ கையில் பொருள் இருக்க ஒரு செயலைத் தொடங்குவது யானைப் போரை மலையின் மீது நின்று கொண்டு அச்சமின்றி காண்பது போன்றதாகும்.

✱ பொருளைத் தேடிச் சேர்க்க வேண்டும். அதுவே பகைவரின் செருக்கினை அறுக்கும் கூர்மையான ஆயுதமாகும்.

✱ சிறந்த பொருளை நல்வழியில் சேர்த்தவர்க்கு அறமும் இன்பமும் ஒரு சேரக் கிடைக்கும்.

5. புலி வசணித்த படலத்தின் கருத்துக்களைத் தொகுத்தெழுதுக.

**புலி இருப்பிடம் தெரிவித்தல்:**

✱ நபிகள் நாயகம் ஆற்றையும் பல காடுகளையும் கடந்து நடந்து சென்று கொண்டிருந்தார். அப்போது எதிரில் வந்த மனிதன் ஒருவன் நபிகளின் திருவடிகளை வணங்கினான்.

✱ அவன் நபிகளிடம் இக்காட்டில் பயணம் செய்வோருக்குத் துன்பம் செய்யும் வரிப்புலி ஒன்று உள்ளது.

**புலியின் தோற்றம்:**

✱ கூர்மையான நகங்களையும், நெருப்புப் பொறி பறக்கும் கண்களையும், புலால் நாற்றம் வீசும் உடலினையும் கொண்டதாய் நீண்ட வாலினால் தரையில் அடித்து இடிபோல் உறுமியது.

✱ நபிகள் நாயகம் அப்புலி இருக்கும் இடத்தைக் கேட்டார். அவனும் அருகில் உள்ளது என்றான்.

**புலி வணங்குதல்:**

✱ புலி, நபிகள் நாயகத்தைப் பார்த்தவுடன் தலையைத் தாழ்த்தி உடல் நடுங்கி அவருடைய திருவடிக்காட்சி காணக் கிடைத்ததே என்று எண்ணி வணங்கியது.

✱ நபிகள் நாயகம் மிகவும் மகிழ்ந்து புலியின் தலையையும் முகத்தையும் தடவி 'நீ இன்று முதல் இந்தக் காட்டினை விட்டு வேறொரு காட்டிற்குச் செல்' என்றார். புலியும் 'நல்லது நல்லது' என்று சொல்லி அவ்விடத்தை விட்டுச் சென்றது.

✱ இதனைக் கண்டவர்கள் இது அதிசயம் எ்னறு வியந்தனர். இவர் "இறை தூதரே" என்று முழுமையாக நம்பினர்.

6. அப்பூதியடிகளின் இல்லத்தின் நிகழ்ந்த நிகழ்வினை விவரி.

**திருநாவுக்கரசர் மீது கொண்ட பற்று:**

* அப்பூதியடிகளார் களவு, பொய், காமம், சினம் முதலிய குற்றங்களை விலக்கியவர். வளமான இல்லற வாழ்வினர். தம் வீட்டிலுள்ள அனைத்துப் பொருட்களுக்கும் திருநாவுக்கரசர் எனப் பெயர் சூட்டினார். தண்ணீர்ப் பந்தலுக்கும் அவரது பெயரையே எழுதி வைத்திருந்தார்.

**தண்ணீர்ப் பந்தலைக் கண்டு வியத்தல்:**

* அப்பூதியடிகளிடம் நீவிர் அமைத்திருக்கும் தண்ணீர்ப் பந்தலுக்கு உம்பெயர் எழுதாமல் வேறொருவர் பெயர் எழுதக் காரணம் என்ன? என்று கேட்டார் திருநாவுக்கரசர்.
* மங்கல வேடத்துடன் வந்து இந்தக் கேள்வியைக் கேட்ட நீர் தாம் யார்? எங்கு வாழ்கின்றீர்? என்றவுடன் வந்தவர் 'வாகீசர்' என்பதை அறிந்து கொண்டார்.

**மூத்த திருநாவுக்கரசுக்கு நேர்ந்தது:**

திருநாவுக்கரசருக்குத் திருவமுது படைக்க வாழையிலையை அறுக்க மூத்த திருநாவுக்கரசு செல்கிறான். பாம்பினால் தீண்டப் படுகிறான்.

**மகனை உயிர்பெற வைத்தல்:**

* உயிர் துறந்த மகனை மறைத்து வைத்து விட்டு உணவு பரிமாற முற்படும் போது உண்மை, நிலையை உணர்ந்த 'வாகீசர்' 'ஒன்றுகொலாம்' என்னும் பதிகம் பாடி உயர் பெற்றெழுமாறு செய்தார்.

2. தொழிற்கல்வி, தொழில் நுட்பக் கல்வி – விளக்குக.

* மருத்துவம், பொறியியல், வேளாண்மை, சட்டம் முதலியவை தொழிற்கல்வித் துறைகள்.
* மேல்நிலைக் கல்வியில் தேர்ச்சி பெற்றோர், பாடப்பிரிவுக்கு ஏற்ப கலந்தாய்வு மூலம் தேர்ந்தெடுக்கப்படுவர்.
* தகுதிக்கு ஏற்ப உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் பணி புரியும் வாய்ப்பு உண்டு.
* உயிரித் தொழில் நுட்பத் துறை, நுண்ணியல் தொழில் நுட்பத்துறை ஆகியனவும் சிறந்த வேலை வாய்ப்பை உருவாக்கித் தரும் தொழிற் கல்விகள்.

**தொழில்நுட்பக் கல்வி:**

* பத்தாம் வகுப்பில் தேர்ச்சி பெற்றவர்கள் தொழில் நுட்பக் கல்லூரியில் சேர்ந்து படிக்கலாம்.
* பொறியியல் துறைகளில் உள்ளது போல பல்வேறு துறைகள் இதிலும் உண்டு.
* வேலை வாய்ப்புகள் பெறவும் வாய்ப்புகள் உள்ளன.
* மேல்நிலைக் கல்வியில் தேர்ச்சி பெற்றவர்கள் இடைநிலையாசிரியர் கல்விப் பயிற்சி, செவிலியர் பயிற்சி, கூட்டுறவுப் பயிற்சி ஆகியவற்றிலும் பயிற்சி பெற்று வேலை வாய்ப்புகளைப் பெறலாம்.

3. கலை அறிவியல் கல்வி, சிறு தொழிற்கல்வி – விளக்குக.

* மேனிலைக் கல்வியில் தேர்ச்சி பெற்றவர்கள் தமிழ், ஆங்கிலம், வரலாறு, கணிதம், இயற்பியல், வேதியியல் போன்ற பாடப்பிரிவுகளில் சேர்ந்து இளங்கலைப் பட்டமும் பின்னர் முதுகலைப் பட்டமும் பெறலாம்.
* பட்டம் பெற்றவர்கள் கல்வியியல் கல்லூரியில் சேர்ந்து இளம் கல்வியியல் பட்டம பெற்று பட்டதாரி ஆசிரியர் பணியில் சேரலாம்.
* பட்டம் பெற்றவர்கள் தமிழ்நாடு அரசுத் தேர்வாணயம், வங்கித்துறை, ஆயுள் காப்பீட்டுத் துறை, தொடர் வண்டித் துறை முதலிய துறைகள் நடத்தும் போட்டித் தேர்வுகளில் வெற்றி பெற்று பல்வேறு வேலை வாய்ப்புகளைப் பெறலாம்.
* மாவட்ட வேலை வாய்ப்பகத்தில் பதிவு செய்தும் வேலை வாய்ப்புகளைப் பெறலாம்.

**சிறு தொழிற் கல்வி:**

* பத்தாம் வகுப்பு தேர்ச்சி பெற்றவர்கள், பெறாதவர்கள் தொழிற்பயிற்சி நிறுவனங்களில் சேர்ந்து சிறுதொழிற் பயிற்சி பெறலாம்.

* ஓராண்டு அல்லது ஈராண்டு பயிற்சி தரும் தொழிற்பயிற்சி நிறுவனங்களில் சேர்ந்து கம்மியர், கடைசல் பிடிப்பவர், கட்டட வரைவாளர், நில அளவையாளர் தச்சர், ஆகிய பயிற்சியினைப் பெறலாம்.

* இயந்திரம், வாகனம், தொலைக்காட்சி, குளிரூட்டும் கருவி, செல்பேசி, கணினி முதலியவற்றைப் பழுது பார்க்கும் படிப்புகளும் உள்ளன.

* மனத்துணிவு, முயற்சி, தன்னம்பிக்கையோடு முறையான பயிற்சி பெற்றிருந்தால் வாழ்வில் உயர்ந்த நிலைக்குச் செல்லலாம் என்பதில் ஐயமில்லை.

4. பெண் முன்னேற்றத்திற்கு தடையாக உள்ளனவாகப் பெரியார் கூறுவனவற்றை எழுது.
   * பெண்கள் முன்னேற்றத்திற்குப் பெருந்தடை அவர்களை வீட்டில் முடக்கி வைப்பதே.
   * முதலில் அவர்கள் அடுப்பங்கரையை விட்டு வெளிவர வேண்டும்.
   * பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்படாததே அவர்களின் அடிமை வாழ்விற்கு அடிகோலியது.
   * பெண்களுக்கு அரசுப்பணி அனைத்துத் துறைகளிலும் வழங்கப்பட வேண்டும்.
   * குழந்தைத் திருமணம் ஒழிக்கப்பட வேண்டும்.
   * மணக்கொடை தவிர்க்கப்பட வேண்டும்.
   * கைம்பெண் மறுவாழ்வு அளிக்கப்பட வேண்டும்.

5. காந்தியடிகள் பின்பற்றிய கொள்கைகளைத் தொகுத்தெழுதுக.
   * பெற்றோரிடம் அன்பு செலுத்துதல்
   * எவ்வளவு துன்பம் வந்தாலும் வாய்மை தவறாமை.
   * அன்பு, உண்மை, உறுதி, இன்னா செய்யாமை ஆகிய உயர்பண்புகளைப் பின்பற்றினார்.
   * அறவழிப் போர் முறையை விரும்பினார்.
   * பகட்டான வாழ்வு பாவம் என்றார்.
   * எளிமையை ஓர் அறமாகக் கருதினார்.
   * இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல் வேண்டும் என்றார்.
   * தேசாபிமானமும், மனிதாபிமானமும் போற்றப்பட வேண்டும் என்றார்.

7. ஞாலம் கருதினும் கை கூடும். எப்போது?
   * காலத்தையும்
   * இடத்தையும் அறிந்து செயல்பட்டால் ஞாலம் கருதினும் கை கூடும்.

8. ஊக்கமுடையான் ஒடுக்கம் எதனைப் போன்றது?

   ஆட்டுக்கிடா பகையைத் தாக்குவதற்குப் பின்வாங்கும் தன்மையைப் போன்றது.

9. கொக்கை உவமையாகக் காட்டி வள்ளுவர் விளக்கும் கருத்து யாது?
   * வாய்ப்பற்ற காலத்தில் அமைதியாக இருக்க வேண்டும்.
   * உரிய காலம் வந்ததும் விரைந்து செயல்பட வேண்டும்.

10. திருவள்ளுவருக்கு வழங்கும் வேறுபெயர்கள் யாவை?
    * முதற்பாவலர்
    * தெய்வப்புலவர்
    * செந்நாப்போதார்
    * பொய்யில் புலவர்

11. ஏலாதி – நூற்குறிப்பு எழுதுக.

- பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஏலாதியும் ஒன்று.
- இந்நூல் தமிழுக்கு அருமருந்து போன்றது.
- ஏலம், இலவங்கம், சிறுநாவற்பூ, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகியவற்றால் ஆன மருந்து ஏலாதி
- இந்நூலின் நற்கருத்துகள் கற்போரின் அறியாமையை அகற்றும்.

23. சான்றோர் யாருடன் சேர்வர்?

**சான்றோர் சான்றோருடன் சேர்வர்.**

33. யாருக்குப் பகைவராலும் தீங்கு செய்ய இயலாது?

அறிவிற் சிறந்த பெரியோரைச் சார்ந்து நடப்பவர்க்குப் பகைவர் செய்யக்கூடிய தீங்கு யாதொன்றும் இல்லை.

34. கெடுப்பார் இலானுங் கெடுபவர் யார்?

குற்றம் கண்ட இடத்து இடித்துத் திருத்தும் பெரியாரின் பாதுகாப்பைத் தேடிக் கொள்ளாத அரசன், தன்னைக் கெடுக்கும் பகைவர்கள் இல்லை எனினும் தானே கெட்டழிவான்.

35. பகைமை இருளைப் போக்குவது எதுவென வள்ளுவர் கூறுகிறார்?

செல்வம் என்னும் அணையா விளக்கு அதனை உடையவர் நினைத்த இடங்களுக்கெல்லாம் சென்று, பகைமை என்னும் இருளைப் போக்கும்.

36. வேந்தற்குரிய பொருள்கள் யாவை?

- மக்களின் வரிப்பொருள்
- சுங்கப் பொருள்
- பகைவர் மூலம் வந்த திறைப்பொருள்.

37. தேவாரம் – பொருள் எழுதுக.

- தே + வாரம் – தெய்வத் தன்மை உடைய இசைப்பாடல்கள்.
- தே + ஆரம் – தெய்வத்திற்குச் சூட்டப் பெற்ற பாமாலை.

38. சிவபெருமான் எத்தன்மையன் என நாவுக்கரசர் கூறுகிறார்?

- சிவபெருமான் எவர்க்கும் அடிமையாகாத தன்மை உடையவன்.
- ஒரு காதில் வெண்சங்கு அணிந்திருப்பவன்.

39. புலியின் தோற்றத்தினைப் பற்றி எழுதுக.

- கொடிய வரிகள்
- நீண்ட வால்
- நெருப்புக் கண்கள்
- ஒளிரும் வெண்பற்கள்
- புலால் நாற்றம் வீசும் வாய்
- அதிகமான சினம் இவையே புலியின் தோற்றமாகும்.

40. வனத்தில் வாழும் விலங்குகளாகச் சீறாப்புராணம் குறிப்பிடுவன யாவை?

காட்டெருமை, பன்றி, கரடி, கலைமான், சிங்கம், யானை முதலியன.

41. புலி வசனித்த படலத்தின் மூலம் நீயறியும் அறம் யாது?

உலகிலுள்ள உயிரினங்கள் அனைத்தும் ஒன்றெனக் கருதுகின்ற அருளாளர்கள் முன் கொடிய உயிரினங்களும் பணிந்து நடக்கும்.

42. சீறாப்புராணத்தில் சிங்கம் எனப்பொருள் தரும் வேறு சொற்கள் யாவை?

சிங்கம் எனப்பொருள் தரும் வேறு சொற்கள்:

* மடங்கல்
* கேசரி ஆகியனவாகும்.

43. ஆற்றுதல் என்பது யாது?

இல்லற வாழ்வில் வருந்தி, வந்தவர்க்கு உதவுதல்.

44. அறிவு எனப்படுவது யாது?

அறிவு எனப்படுவது அறிவில்லாதவர்களின் சொற்களைப் பொறுத்துக் கொள்ளுதலாகும்.

45. பண்பு எனப்படுவது யாது?

பண்பு எனப்படுவது சான்றோர் கூறிய நல்வழியை அறிந்து அதன்படி நடப்பதாகும்.

46. கலம்பக நூல்களுள் முதல் நூல் எது?

நந்திக் கலம்பகம்.

47. கலம்பக உறுப்புகள் நான்கினை எழுதுக.

அம்மானை, கார், மறம், தவம்.

48. நந்திக்கலம்பகம் யார்மீது பாடப்பெற்றது?

பல்லவமன்னன் மூன்றாம் நந்திவர்மன் மீது பாடப்பெற்றது.

49. ஆழ்வார்கள் பாடிய பாடல்களின் தொகுப்பின் பெயர் என்ன?

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்.

19. 'ஞாலம்' – பெயர்க்காரணம் கூறுக.

ஞாலம் என்னும் தமிழ்ச்சொல் 'ஞால்' என்னும் சொல்லடியாகத் தோன்றியது என்பர். ஞால் என்பதற்குத் தொங்குதல் என்பது பொருள்.

20. கண்ணிடந்து அப்பியவர் யார்? அவர் வரலாறு உணர்த்தும் செய்தி யாது?

கண்ணிடந்து அப்பியவர் கண்ணப்பன் ஆவார். ஊனுக்கு ஊன் என்னும் செய்தி அறுவை மருத்துவத்தால் நோயைப் போக்கலாம் என்ற உண்மையை உலகிற்கு உணர்த்துகிறது.

21. காந்தியடிகளைக் கவர்ந்த குஜராத் பாடலின் கருத்து யாது?

'தாகத்திற்கு நீர் தருவதில் ஒன்றுமில்லை;
தீமை செய்தவர்க்கும் நன்மையே செய்,
உண்மைப் பொருண்மை உண்டு'
என்ற அப்பாடல் இன்னா செய்யாமை (அஹிம்சை) என்னும் கருத்தை அவருள் விதைத்தது.

22. இயேசுவின் மலைப்பொழிவு நூலைப் படித்துக் காந்தியடிகள் உணர்ந்தது என்ன?

தீயவனை எதிர்க்காதே;
அவனிடம் உள்ள தீமையை எதிர்த்து நில்;
பகைவனிடமும் அன்பு பாராட்டு;
என்னும் கருத்துகள் அவரிடம் நெகிழ்ச்சியை ஏற்படுத்தின.

23. காந்தியடிகளுக்கு இளம் பருவத்திலேயே இயல்பாக அமைந்த உயர்பண்புகள் யாவை?

1) அன்பு 2) உண்மை 3) உறுதி 4) இன்னா செய்யாமை

24. காந்தியடிகளின் அறவழிப் போராட்டத்தில் உருவான இயக்கங்கள் யாவை?

* கதர் இயக்கம்
* மதுவிலக்கு
* தீண்டாமை ஒழிப்பு

25. எவற்றை அறநெறியாகப் போற்ற வேண்டும் என்று காந்தியடிகள் கூறினார்.
- எளிமை
- சிக்கனம்

26. காந்தியடிகள் எதனைப் பாவம் என்கிறார்?
இந்தியாவில் "கோடானு கோடி மக்கள் உண்ணக் கஞ்சியும், உடுக்கக் கந்தையும் இல்லாமல் தவிக்கும்" இந்த நாட்டில் இன்னும் உங்களில் பலர் கோடிக்கணக்கான விலை மதிப்புள்ள அணிகலன்களை அணிந்துகொண்டு பகட்டாக வாழ்வதே பாவம் என்கிறார்.

27. இந்தியாவின் வாழ்வு குறித்துக் காந்தியடிகள் கூறியது யாது?
இந்தியாவின் வாழ்வு என்பது "இலட்சக்கணக்கான கிராமங்களின் வாழ்வுதான்; அந்தந்த கிராமங்களின் வாழ்வு, அந்த நாட்டின் உழவர்கள், இளைஞர்கள் ஆகியோர் கைகளில்தான் உள்ளது" என்றார் காந்தியடிகள்.

28. இராமலிங்கர் எங்கு, எப்போது பிறந்தார்?
பிறந்த ஊர்: கடலூர் மாவட்டம் சிதம்பரம் வட்டம் மருதூர்.
பெற்றோர்: இராமையா – சின்னம்மை 5–வது மகன்
பிறந்த ஆண்டு: 05.10.1823.

29. இராமலிங்கர் புதுநெறி கண்ட புலவர் எனப் போற்றப்படக் காரணம் என்ன?
இராமலிங்கர் உருவ வழிபாட்டை நீக்கி, ஒளி வழிபாட்டை மக்கள் பின்பற்றச் செய்தார். அதற்காகவே வடலூரில் சத்திய ஞானசபையை நிறுவினார்.
மேலும் மக்கள் அறியாமை நீங்கி அறிவு ஒளி பெற வடலூர் சத்திய ஞானசபையில் ஜோதி தரிசனப் புதுமையைப் புகுத்தினார். இதனால்தான் பாரதியார் இவரைப் புதுநெறி கண்ட புலவர் என்று போற்றினார்.

30. சத்திய தரும சாலையில் வள்ளலார் செய்த தொண்டு யாது?
வள்ளலார் வடலூரில் சத்திய தருமச் சாலையை நிறுவிச் சாதி, மத வேறுபாடு இன்றிப் பசித்தோர்க்கு எல்லாம் உணவிட்டார்.

31. வளரும் பிள்ளைகளுக்கு இராமலிங்கர் வழங்கிய அறிவுரைகளுள் இரண்டனைக் கூறுக.
- தந்தை தாய் மொழியைத் தள்ளி நடக்காதே.
- குருவை வணங்க கூசி நிற்காதே.

32. ஒவ்வொருவரும் குறைந்தது எக்கல்வித் தகுதியினைப் பெறுதல் வேண்டும்?
ஒவ்வொருவரும் குறைந்தது மேனிலைக் கல்வியில் தேர்ச்சி பெற்றிருத்தல் வேண்டும்.

33. தற்போது வளர்ந்து வரும் இரண்டு தொழில் நுட்பத் துறைகள் யாவை?
- உயிரி– தொழில் நுட்பத் துறை.
- நுண்ணியல் தொழில் நுட்பத்துறை.

34. பட்டப் படிப்புகளில் எவையேனும் நான்கனை எழுதுக.
- கணிதத்தில் இளங்கலைப் பட்டம்.
- இயற்பியலில் இளங்கலைப் பட்டம்
- கணக்குப் பதிவியலில் இளங்கலைப் பட்டம்.
- தமிழில் இளங்கலைப் பட்டம்

35. இடைநிலையாசிரியர் பயிற்சி குறித்து எழுதுக.
மேனிலைக் கல்வி தேர்ச்சி பெற்றவர்கள் இடைநிலைக் கல்விப் பயிற்சி இரண்டு ஆண்டுகள் படித்துத் தேர்ச்சிப் பெறுவதுடன் ஆசிரியர் தகுதித் தேர்விலும் தேர்ச்சி பெற்றால் இடைநிலை ஆசிரியராகப் பணியில் சேரலாம்.

S.ARUNKUMAR M.A., M.B.A., B.Ed., M.Phil., N.E.T.,

29. **பொருளாவது யாது?**
ஒழுக்க முறை
30. **முதற்பொருள் என்பது யாது?**
நிலமும் பொழுதும் முதற்பொருள் எனப்படும்.
31. **கருப்பொருள் என்பது யாது?**
அந்தந்த நிலத்திற்குரிய தெய்வம், மக்கள், உணவு, விலங்கு முதலிய பொருள்கள் கருப்பொருள்கள் எனப்படும்.
32. **வயலும் வயல் சார்ந்த இடமும் எத்திணைக்குரியது?**
மருதம்
33. **ஐப்பசி கார்த்திகை ஆகிய இரு திங்களும் எக்காலத்திற்குரியன?**
குளிர்காலம்
34. **வைகறைக்குரிய கால அளவு யாது?**
இரவு 2 மணி முதல் காலை 6 மணி வரை.
35. **முருகன் எந்நிலத்திற்குரிய தெய்வம்?**
குறிஞ்சி
36. **முல்லை நிலத்திற்குரிய கருப்பொருள்கள் நான்கனை எழுதுக.**
தெய்வம்— திருமால்
மக்கள் – ஆயர், ஆய்ச்சியர்
உணவு – வரகு, சாமை
விலங்கு – முயல், மான், புலி
37. **புறத்திணை என்பது யாது?**
புறம்பற்றிய நெறிகளைக் கூறுவது புறத்திணை.
38. **புறத்திணைகள் நான்கனை எழுதுக.**
* வெட்சித்திணை * கரந்தைத் திணை * வஞ்சித் திணை * காஞ்சித் திணை

39. **மதில்போர் பற்றிய புறத்திணைகள் யாவை?**
* நொச்சித் திணை * உழிஞைத் திணை
40. **பொருந்தாக் காமம் பற்றிய திணை யாது?**
பெருந்திணை
41. **நால்வகைப் பாக்கள் யாவை?**
வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா
42. **வெண்பாவின் வகைகள் யாவை?**
ஆறு வகைப்படும்.
* குறள் வெண்பா * பஃறொடை வெண்பா * நேரிசை வெண்பா
* நேரிசை சிந்தியல் வெண்பா * இன்னிசை வெண்பா * இன்னிசை சிந்தியல் வெண்பா
43. **குறள் வெண்பாவின் இலக்கணம் யாது?**
* வெண்பாவின் பொது இலக்கணம் பெற்று வரும்.
* இரண்டு அடிகளை உடையது.
* ஒரு விகற்பத்தானும், இரு விகற்பத்தானும் வரும்.
44. **ஆசிரியப்பாவின் வகைகள் யாவை?**
நேரிசை ஆசிரியப்பா, இணைக்குறள் ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா, அடிமறி மண்டில ஆசிரியப்பா.

அ) **பொருளாவது யாது?**
ஒழுக்க முறை
ஆ) **முதற்பொருள் என்பது யாது?**
நிலமும் பொழுதும் முதற்பொருள் எனப்படும்.
இ) **கருப்பொருள் என்பது யாது?**
அந்தந்த நிலத்திற்குரிய தெய்வம், மக்கள், உணவு, விலங்கு முதலிய பொருள்கள் கருப்பொருள்கள் எனப்படும்.

1. **வெண்பாவின் பொது இலக்கணம் யாது?**
   - ஈற்றடி முச்சீராய் வரும்
   - ஏனைய அடிகள் நாற்சீராய் வரும்.
   - இயற்சீர் வெண்சீர் மட்டுமே வரும்.
   - வெண்சீர் வெண்டளையும் மட்டுமே வரும்
   - ஈற்றடியின் ஈற்றுச்சீர், நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகளுள் ஒன்று கொண்டு முடியும்.
   - செப்பலோசை பெற்று வரும்
   - இரண்டடி முதல் பன்னிரண்டு அடிவரை வரும்.
2. **ஆசிரியப்பாவின் இலக்கணம் யாது?**
   - அளவடிகளைப் பெற்று வரும்.
   - இயற்சீர் பயின்று வரும். பிற சீரும் வரும்
   - வஞ்சியுரிச்சீர்கள் வாரா.
   - ஆசிரியத் தளைகள் பயின்று வரும். பிற தளைகள் கலந்தும் வரும்.
   - மூன்றடி சிற்றெல்லை உடையது.
   - பாடும் புலவனின் மனக் கருத்திற்கேற்பப் பல அடிகளைப் பெற்றும் வரும்.
   - அகவலோசை பெற்று வரும்.
   - ஈற்றடியின் ஈற்றுச்சீர் ஏகாரத்தில் முடிவது சிறப்பு.
3. **நேரிசை ஆசிரியப்பாவினை எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக.**
   - ஆசிரியப்பாவின் , பொது இலக்கணம் பெற்று வரும்.
   - ஈற்றயலடி முச்சீராய் வரும்
   - பிற அடிகள் நாற்சீராய் வரும்
4. **அடிமறிமண்டில ஆசிரியப்பாவினை எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக.**
   - ஆசிரியப்பாவின் பொது இலக்கணம் பெற்று வரும்.
   - எல்லா அடிகளையும் முன்பின்னாக மாற்றி மாற்றிப் படித்தாலும் ஓசையும் பொருளும் மாறாது வரும்.

   **(எ.கா)**
   தாய்மொழி வளர்த்தல் தமிழர்தம் கடனே
   வாய்மொழி புரத்தல் மற்றவர் கடனே
   காய்மொழி தவிர்த்தல் கற்றவர் கடனே
   ஆய்மொழி யுரைத்தல் அறிஞர்தங் கடனே
5. **தற்குறிப்பேற்ற அணியைச் சான்றுடன் விளக்குக.**
   இயல்பாக நடக்கும் நிகழ்ச்சியின் மீது கவிஞன், தம் குறிப்பினை ஏற்றிக் கூறுவது தற்குறிப்பேற்ற அணி ஆகும்.
   **(எ.கா)**
   தையல் துயர்க்குத் தரியாது தம்சிறகாம்
   கையால் வயிறலைத்துக் காரிருள்வாய் – வெய்யோன்
   வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
   கூவினவே கோழிக் குலம்

6. **வஞ்சப் புகழ்ச்சி அணியை சான்றுடன் விளக்குக.**
   புகழ்வது போலப் பழிப்பதும், பழிப்பது போலப் புகழ்வதும் வஞ்சப் புகழ்ச்சி அணி எனப்படும்.
   (எ.கா)
   தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
   மேவன செய்தொழுக லான்.

7. **இரட்டுறமொழிதலணி என்றால் என்ன? சான்று காட்டி விளக்குக.**
ஒரு சொல் இருபொருள்பட அமைந்து வருதல் இரட்டுற மொழிதலணி எனப்படும்.
(எ.கா)
ஆடிக் குடத்தடையும் ஆடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும் – ஓடிமண்டை
பற்றின் பரபரெனும் பாரில்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம் பெள்ளெனவே ஓது

8. **சொற்பொருள் பின்வருநிலையணி என்றால் என்ன? சான்று தந்து விளக்குக.**
செய்யுளில் முன்னர் வந்த சொல், மீண்டும் மீண்டும் வந்து ஒரே பொருளைத் தருவ
சொற்பொருள் பின்வருநிலையணி எனப்படும்.
(எ.கா)
தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

## அலகிடுதல்

9. ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| ஒழுக்/கம் | நிரை, நேர் | புளிமா |
| விழுப்/பம் | நிரை, நேர் | புளிமா |
| தர/லான் | நிரை, நேர் | புளிமா |
| ஒழுக்/கம் | நிரை, நேர் | புளிமா |
| உயி/ரினும் | நிரை, நிரை | கருவிளம் |
| ஓம்/பப் | நேர், நேர் | தேமா |
| படும் | நிரை | மலர் |

ஈற்றுச் சீர் மலர் என்னும் வாய்பாட்டால் முடிந்துள்ளது.
இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு

10.

| சீர் | அசை | வாய்பாடு |
|---|---|---|
| இல்/லா/ரை | நேர் நேர் நேர் | தேமாங்காய் |
| எல்/லா/ரும் | நேர் நேர் நேர் | தேமாங்காய் |
| எள்/ளுவர் | நேர் நிரை | கூவிளம் |
| செல்/வரை | நேர் நிரை | கூவிளம் |
| எல்/லா/ரும் | நேர் நேர் நேர் | தேமாங்காய் |
| செய்/வர் | நேர் நேர் | தேமா |
| சிறப்பு | நிரைபு | பிறப்பு |

இக்குறட்பாவின் ஈற்றுச்சீர் பிறப்பு என்னும் வாய்பாட்டால் முடிந்துள்ளது.

7. This is the age of computers. Computers are becoming more and more a part of everyday life. Today in the running of business, firm, industrials concerns and government departments, lot of information processing is required. The Computer is the superfast information processing unit.

தற்காலம் கணினியுகம் ஆகும். கணினிகள் மென்மேலும் வாழ்வின் ஒரு பகுதியாக உருவாகி வருகின்றன. இன்று வாணிகம், நிறுவனம், தொழிற்சாலைகள் தொடர்பாகவும் மற்றும் அரசுத் துறைகளிலும் செயல்பாடுகளிலும் அளவற்ற தகவல் பராமரிப்பு தேவைப்படுகிறது. தகவல் பரிமாற்றங்களில் கணினி அதிவிரைவாக செயல்படுகிறது.

8. Gandhiji loved and respected truth more than anything else. He fought his whole life to upload the value of truth. From his experiment with truth he came to know there could not be a God other than truth. He taught us that our thought, word and deed should be one. He preached what he practiced.

காந்தியடிகள் மற்றெல்லாவற்றையும்விட உண்மையை நேசித்து மதித்தார். அவர் தன் வாழ்நாள் முழுவதும் உண்மையின் மதிப்பீடுகளைக் கடைபிடிக்கப் போராடினார். அவர் உண்மைகளை ஆராய்ந்து பார்த்ததில் உண்மையைத் தவிர வேறு கடவுள் இல்லை என்று கண்டறிந்தார். நமது எண்ணம், சொல் செயல் யாவும் ஒன்றாகவே இருக்க வேண்டுமென கற்பித்தார். அவர் எதைக் கடைபிடித்தாரோ அதையே போதித்தார்.

9. Schools do not stop with teaching the children the lessons alone. They do more. It is in the schools that the boys and girls from some regular habits. They learn to behave in an orderly way. They are corrected whenever they go wrong.

பள்ளிகள் குழந்தைகளுக்கு பாடங்கள் கற்றுத் தருவதோடு மட்டும் நின்று விடுவதில்லை. அவை இன்னும் அதிகமான பணிகளைச் செய்கின்றன. பள்ளிகளில் சிறுவர், சிறுமியர் சில பழக்க வழக்கங்களைக் கற்றுக் கொள்கின்றனர். அவர்கள் முறையான வழியில் நடக்கக் கற்றுக்கொள்கின்றனர். அவர்கள் தவறான வழியில் செல்லும்போது திருத்தப்படுகின்றனர்.

10. Library is a place for reading. There will be a librarian in each library. He takes care of rach books in the library. It has story books in English and Tamil. It also has books of science, economics and commerce. There are newspapers and magazines in Tamil and English. We can read them silently. It is a place for silent reading. Books can be borrowed from to weeks from the library. It is useful for everyone.

நூலகங்கள் புத்தகங்களை வாசிப்பதற்கான இடம். ஒவ்வொரு நூலகத்திலும் ஒரு நூலகர் இருப்பார். அவர் நூலகத்திலுள்ள அனைத்துப் புத்தகங்களையும் பாதுகாப்பார். நூலகத்தில் தமிழிலும் ஆங்கிலத்திலும் கதைப் புத்தகங்கள் உள்ளன. மேலும் அறிவியல், பொருளாதாரம், வணிகவியல் தொடர்பான நூல்களும் நூலகத்தில் உள்ளன. செய்தித் தாள்களும் பருவ இதழ்களும் தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளன. அவற்றை அமைதியாக நாம் வாசிக்கலாம். நூலகம் அமைதியாக படிப்பதற்கு உரிய இடமாகும். நூலகத்திலிருந்து இரு வாரங்களுக்குப் புத்தகங்களை இரவலாகப் பெற்றுக் கொள்ளலாம். நூலகம் நம் ஒவ்வொருவருக்கும் நன்மை பயப்பதாகும்.

9. **குறட்டை ஒலி**

**தென்பகுதி குடும்பம்:**

கணவன், மனைவி, 6 •குழந்தைகள், 1 பாட்டி, 1 நாய் என்று பெரிய ஏழைக் குடும்பம்.

**வடபகுதி குடும்பம்:**

கணவன், மனைவி என இருவர் மட்டுமே வாழும் சிறிய குடும்பம்.

**நாய்குட்டிகள்:**

நாய் 5 குட்டிகளை ஈன்றது. அடுத்த மூன்றாம் நாள் வெளியே சென்ற நாய் திரும்பவில்லை. நாய்குட்டிகள் பசியால் கத்தின.

**ஏழைத்தாயின் கருணை:**

பசியால் கத்திய நாய்குட்டிகளுக்கு தன்னுடைய பாலையே பஞ்சில் நனைத்துத் தந்து பசி போக்கினாள்.

S.ARUNKUMAR M.A., M.B.A., B.Ed., M.Phil., N.E.T.,